# எட்டாச் சுரம்

- கவிஞர் இரா. கருணாநிதி -

திருநெல்வேலி தென்னிந்திய சைவசித்தாந்த
நூற்பதிப்புக் கழகம் லிமிடெட்,
154, டி.டி.கே. சாலை, ஆழ்வார்பேட்டை, சென்னை - 600 018.
தொலைபேசி : 4354157, 4355299
மின் அஞ்சல் : sidhantham@eth.net

| | | |
|---|---|---|
| நூலின் பெயர் | - | எட்டாச் சுரம் |
| நூல் ஆசிரியர் | - | கவிஞர் முனைவர் இரா. கருணாநிதி |
| நூல் உரிமை | - | ஆசிரியருக்கே |
| வெளியீடு ஆண்டு | - | ஜனவரி 2002 (முதற்பதிப்பு) |
| நூல் வெளியீடு | - | திருநெல்வேலி தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம் லிமிடெட்,<br>154, டி.டி.கே. சாலை,<br>ஆழ்வார்பேட்டை, சென்னை - 18.<br>தொலைபேசி : 4354157 |
| வனப்பும் வடிவமும் | - | ஜோ மல்லூரி<br>அகிரா கம்யூனிகேஷன்ஸ்,<br>3/50, மேட்டுத் தெரு,<br>புனித தோமையார் மலை,<br>சென்னை - 600 016.<br>தொலைபேசி : 2316543 |
| முகப்போவியம் | - | திரு. முத்துக்குமார் |
| ஒளி அச்சு | - | திரு. மா. கோபி |
| தாள் | - | வெள்ளைத்தாள் (9.3) |
| பக்கங்கள் | - | 72 |
| அளவு | - | டம்மி 1/8 |
| விலை | - | ரூ.30/- |

# பதிப்புரை

தமிழ்த் திரையுலகில் பாட்டால் படத்தைத் தூக்கி நிறுத்திய இசையமைப்பாளர்கள் பலர். பல முன்னோடிகளுக்குப் பிறகு இசையுலக இரட்டையர்கள் விஸ்வநாதன்-ராமமூர்த்தி பல வெற்றிப் படங்களுக்கு இசையமைத்து உச்சிக்குச் சென்று, பின் ஒய்ந்து நின்ற நேரம். வடக்கிலிருந்து வந்த இந்தித் திரைப்படப்பாடல்கள் இளம் உள்ளங்களைக் கவர்ந்திருக்கும் நேரம். தமிழிசை விழுந்து விடுமோ என்று இசையார்வளர்கள் சோர்ந்து நின்ற நேரம்.

பண்ணைப்புரத்திலிருந்து எழுந்த பண்ணோசை பட உலகில் தென்றலாய் நுழைந்து - புயலாய் வீசி பட உலகம் முழுவதையுமே ஆக்கிரமிக்கத் தொடங்கியது. இசை என்றால் இளையராஜா என்று இருபத்தைந்து ஆண்டுகளுக்கு மேலாக இசைஞானியாகி இசையுலகின் இமயத்து உச்சியைத் தொட்டு உலகத்தையே ஒரு கலக்கு கலக்கி விட்டது.

முறையாக இசை பயிலவில்லை. வளமான வாழ்க்கை இல்லை. பல இசையமைப்பாளர்களைத் துரோணர்களாக ஏற்று, தாமே இசை பயின்ற

இசைப் பேரொளி. மேனாட்டு இசைக் கலைஞர்களும் வியக்கும் வகையில் அவர்களைக் கொண்டே இசைக்கோலம் போட்ட இசைப் பேரரசர்.

ஏழிசைப் பயனான இவர்தம் வாழ்க்கைப் பயணத்தை எட்டாச் சுரமாகக் காவியமாகப் படைக்க முற்பட்டு வெற்றி பெற்றுள்ளவர் தங்கத் தமிழ்ப் பாடல்களை ஏடுகளிலும் கவியரங்குகளிலும் தந்து, இசைஞானி இளையராஜாவிடமே தங்கப் பேனாவைப் பரிசாகப் பெற்ற்றவர் தமிழ்ப்பேராசிரியர், கவிஞர், முனைவர் கருணாநிதி எம்.ஏ., எம்.பில்., பிஎச்.டி.

இவர் தம் உழைப்பு வெற்றிபெற இக்காவியத்தை வாங்கிப் படித்துத் தமிழன்பர்கள் துணைநிற்பார்களாக.

-சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தார்-

## இசைஞானி இளையராஜா

ஞாயிறு எழ
மொட்டுகள் மலர்வது உண்மைதான் என்றாலும்
எல்லா மொட்டுகளும்
மலர்வதில்லை!-
ஏதோ சில மட்டுமே மலர்கின்றன!
தமிழெனும் ஞாயிறு
எப்போதும்
தன்ஒளியைக் குறுக்கியதில்லை!
வீசுகின்ற வீச்சில் குறையேதும் இல்லை!
இருந்தும் -
மொட்டுகள் பல இருந்தும்
இதோ இங்கே
ஒரே ஒரு மொட்டு
மலர்ந்திருக்கிறது! - ஆம். தம்பி கருணாநிதிதான்
அந்த மொட்டு.
அது
பக்குவப்பட்டுத் தயாராகிக் காத்திருக்கிறது-
புலரும்
நேரம் வந்தது. மலராய் மலர்ந்து வந்தது.

அந்த மலர்
வீசப் போகும் வாசமெல்லாம் -
தமிழென்னும் நறுமணமே!
பாடும் பொருள் எதுவானாலும் என்ன?
பாடும் பொருள்
ஒன்றல்லவோ?

அங்கே
ஞாயிற்றின் ஒளியால் மலரே மலரும்.

இங்கே
தமிழின் ஒளியால் தமிழே மலரும்.

அங்கே
மலர் மலர்ந்தால் வாசம் வீசும்.

இங்கே
தமிழே மலரத் தமிழே மணக்கும்!

இந்த மலர்
-நல் மலராய் நல்லவை பரப்ப
நற்பொருளுக்கு அணியும்-
நன்மாலையாகும்
தகுதி பெறட்டும் என உள்ளன்போடு-
இறைவனை வேண்டுகிறேன் -

இறைவனடி இளையராஜா

## வானை அளக்குமா வண்டு

9-6-1995 அன்று அதிகாலை ஏ.வி.எம். படப்பிடிப்பகத்திற்குள் பாடலாசிரியராகச் செல்கிறேன். ஆமாம். குமுதம் - இசைஞானி இணைந்து நடத்திய "திரைப்படப்பாடல் எழுதும் போட்டியில் முதற்பரிசு தங்கப் பேனாவும், ரூபாய் 2 ஆயிரமும் பெற்று "ஜோக்கர்" எனும் படத்திற்குப் பாடல் எழுதும் வாய்ப்பு பெற்ற நிலையில் உள்ளே நுழைகிறேன்.

பாடல் ஒலிப்பதிவுக்காக முதலில் குத்து விளக்கேற்றுகிறார் இசைஞானி. அதுபோது தங்கப் பேனாவை இசை சிங்கத்தின் கைகள் தர வாங்கிக் கொண்டு வணங்குகிறேன். சற்று நேரத்தில் இயக்குநர் திரு. ஜான்ரோஷன் என் பாடல்களை எடுத்துக் கொண்டு என்னை இசைஞானி அறைக்கு அழைத்துச் சென்றார். உள்ளே நுழைந்து வணக்கம் ஐயா! என்கிறேன். தலையஸ்சக்கிறார். "பாடல்களை மாத்தச் சொல்வேன் உடனே சந்தத்திற்குத் தகுந்தபடி மாத்தணும் உட்கார்" என்கிறார் மாற்றினேன் 'சரியாக இருக்கு' என்றார். "எழுதத் தொடங்கும் முன் முதலில் பிள்ளையார் சுழி போடு" பிள்ளையார் சுழியின் அர்த்தம் தெரியுமா? அது எழுத்தின் தொப்பூழ்க் கொடி" என்றார்.

எத்தனையோ ஜாம்பவான்களும் நடுங்கி நிற்கும் அவர் முன் என்னால் இருக்க இயலவில்லை. தத்தளிக்கும் இதயத்தோடு தத்தகரத்தை முத்தாய்ப்பாக எழுதி முடித்தேன்.

குமுதம் பத்திரிகை இந்தப் பெரிய வாய்ப்பை எனக்குத் தந்தது. இசைஞானியின் கைவிரல்களுக்கும் குமுதம் இதழுக்கும் என் தலைதாழ்ந்த வணக்கங்கள். நன்றிகள்.

அந்தப் பாடல் அப்போது வரவில்லை. பாவம் அந்தப் படத்தின் தயாரிப்பாளர் திரு.ரவி யாதவ் “குற்றப்பத்திரிகை” எனும் படம் எடுத்ததால் பணம் முடங்கிப் போக நான் எழுதிய பாடல் வெளிவர முடியாமல் போனது.

அன்று அந்தி நேரத்தில் இசைஞானி என்னை அழைத்தார். சென்றேன். சின்ன வயதில் நன்கு படித்திருக்கிறாய்? மேலும் படிக்கலாமா?'' என்கிறார் இசைஞானி 'பிஎச்.டி.,' படிப்பு இருக்கு என்கிறேன். 'இதெல்லாம் பிறகு வச்சிக்கலாம் போய் படி' என்கிறார். எனக்கோ பாடல் எழுதவும் ஆசை, பிஎச்.டி. படிக்கவும் ஆசை. அந்த நேரத்தில் அழகப்பா பல்கலைக்கழகத்தில் பிஎச்.டி படிக்க வாய்ப்பு வந்தது. நல்ல வாய்ப்பு என்று சென்னையை விட்டு நழுவி விட்டேன்.

இசைஞானியின் வாக்குக் கேற்ப நான் 'டாக்டர்' பட்டம் பெற்றேன். சென்னை வரும் போதெல்லாம் இசைஞானியைப் பார்க்காமல் போனதில்லை. பாடல் எழுதிய சில மாதத்திற்குள் அன்புச் சகோதரர் திரு. கார்த்திக்ராஜா அவர்கள் "அந்தப் பாடலை வேறு ஒரு படத்தில் பயன்படுத்தலாம் அப்பாவிடம் சொல்கிறேன்" என்றார்.

இசைஞானபிதா என்னை விரும்புவார். எப்போது சென்றாலும் எந்நிலையில் சென்றாலும் இன்முகம் குறையாமல் எனக்கு இனிப்பு, பேனா என்று ஏதேனும் தருவார். வெகுநேரம் இலக்கியம் குறித்து உரையாடுவார். அவரிடம் நான் கற்றவை ஏராளம்.

நான் முனைவர் பட்டம் முடித்து சென்னையிலுள்ள என் இளைய அக்கா வீட்டில் தங்கிக்கொண்டு வேலை தேடும் படலத்தில் ஈடுபட்டேன். அப்போது ஒப்பற்ற படைப்புகளை பத்திரிகைகளில் இசைஞானி எழுதிக் குவித்திருந்தார். நான் அவரின் எழுத்துகளை

உச்சி முதற்பாதம் வரை என் இதழ்களில் அச்சடித்து வைத்திருந்தேன். அவரை அவ்வப்போது சந்திக்கும் போதெல்லாம் இவை குறித்து மெச்சுவேன். விழிவிரித்துப் பார்த்தவர் என் ஞாபக சக்தியைப் பாராட்டுவார்.

உலகின் பெரிய இசையமைப்பாளரான அவரின் நிலவுத் தமிழில் நான் நீந்தி ரசித்ததுண்டு; நெடுநேரம் அவர் கருத்துக்களைச் சிந்தித்ததுண்டு. அவர் படைப்புகளின் சிறப்பான புதுமை நோக்கு அனைவரையும் ஈர்க்கும்.

நான் கல்லூரி விரிவுரையாளராக வேலை தேடினேன். "வேலை கிட்டும் வரை தினமும் உங்கள் இலக்கியத் தொண்டிற்கு உதவியாளராக இருக்கிறேன் அய்யா" என்றேன். "சரி வா!" என்றார். யாருக்கும் கிட்டாத பேறு என்று மகிழ்ந்தேன். தலையாய வேலைகளையும் தவிர்த்துவிட்டு பொறுப்போடும், ஆர்வமோடும் நாள்தோறும் சென்று விடுவேன். "தினகரன்" இதழில் "இளையராஜாவின் சிந்தனைத் தொடர்" எனும் கட்டுரைகள் பரபரப்பூட்டின. விறுவிறுப்பான அக்கட்டுரைகளை எல்லாம் எடுத்து அதன் நிருபர் திரு. ஜெயச்சந்திரனிடம் கொடுப்பேன். இப்பணிகள் இசைஞானியின் நிழலில் இருக்க வைத்தது. ஒரே மூச்சில் இசைஞானி தன் படைப்புகளை எழுதுவது அங்கே உலவும் அறிஞர்கள், கவிஞர்களுக்கு மகிழ்ச்சி கலந்த வியப்பைத் தந்தது.

நகல் எடுப்பது, தட்டச்சு செய்வது, பத்திரிகை அன்பர்களிடம் படைப்புகளைத் தருவது, அவர் படைப்புகளை அவர் முன்பே படித்துக் காண்பிப்பது என்று அவரின் பெருந்தொண்டில் என் நிலை சிறுத்தொண்டர் புராணமாகச் சென்றது. பிறகு விரிவுரையாளராக வேலையும் வந்தது.

இசைஞானி இலக்கண இலக்கியத்தில் ஆழமான ஞானம் பெற்றவர் என்பதை அனுபவத்தில் உணர்ந்தேன்.

பரபரப்பான இசைக் கோர்ப்பை முடித்து வந்து விறுவிறுப்பாக

அவர் எழுதும் தத்துவங்கள் ஆய்வாளர்களுக்கு அமுதப் பெருக்கு எனலாம். அடித்தல், திருத்தல் இல்லாமல் ஒரே படியில் எழுதுவது அவர் வழக்கம். மனதிற்குள்ளே எழுதி பிறகு எழுதுகிறார் என நினைத்தாலும் ஆற்றின் வேகமாக எழுதும் போது அசத்துகிறார்.

ஐந்து வாரங்களுக்கு சுமார் 50 பக்கங்கள் ஒரே மூச்சில் அவர் எழுதியது கண்டு நான் அதிர்ந்து போனேன். நிருபர் ஜெயச்சந்திரனும்தான்.

தினகரன் இதழில் எழுதிய போது வாசர்கள் கடிதங்கள் வந்து குவிந்தன. இசைஞானி ஒவ்வொரு மடல்களுக்கும் கடகடவென தத்துவ தரிசனங்களாக பதிலுரைத்தார். புலவர் புலமைப்பித்தன், மு. மேத்தா ஆகியோர் இசைஞானியின் ஆழ்ந்த ஞானத்தை என்னிடம் வியந்து கூறியவை விண்மீன்கள் ஒத்தவை.

ஒருமுறை இசைமேதையிடம், நான் ஒரு வாசகர்கள் வினாவாகக் கேள்வி கேட்டேன். அதற்கும் ஒரே மூச்சில் பதில் சொல்லிவிட்டுப் போனார்.

பல்கலைக்கழகப் பேராசிரியர்கள், கல்லூரி விரிவுரையாளர்கள் இலக்கிய வட்டத்துப் பெரியவர்கள் எல்லாம் இவரின் படைப்புகளை வெகுவாகப் போற்றுவது சுட்டத்தக்கது.

குறிப்பாக அழகப்பா பல்கலைக்கழகத் தமிழ்த்துறைத் தலைவர் பேராசிரியர் முனைவர் இரா. பாலசுப்பிரமணியன், 'எப்படிப்பா இப்படியெல்லாம் சிந்திக்கிறார் அவர் பெரிய சித்தர்ப்பா, ஞானதேவி அவர் தலையில் இறங்கிவிட்டாப்பா'' என்று கூறிய வார்த்தைகள் செவியில் அலைமோதுகின்றன.

சங்கப் பாடல்கள் உள்ளிட்ட இலக்கியப் பாடல்களை ஆர்வத்தின் காரணமாக அவ்வப்போது நான் ஒப்பிப்பது உண்டு. அவைகளுக்கு அவர் கூறும் விளக்கங்களும் புதிய தரிசனங்களும் யாரும் கூறாத விமர்சனங்களும் ரசித்துப் புசித்துப் போற்றத் தக்கவையாகும்.

'வெண்பா புலவர்க்குப் புலி' என்பர். மாமுன் நிரை. விளம்முன் நேர், காய்முன் நேர் எனும் நுட்பதிட்பச் செறிவோடும் நாள், மலர், காசு, பிறப்பு எனும் முடிப்புச் சொல்லோடும் வெண்பாவைத் தளைதட்டாமல் அவர் எழுதுவார். இதில் என்ன வியப்பு என்றால் உரைநடையின் வேகத்தைப் போலவே வெண்பாவிலும் காட்டுவார்.

சாப்பாட்டு நேரத்திற்குள் பத்து வெண்பாக்களுக்கு மேல் அவர் எழுதிக் காட்டும் எழிலை எப்படிப் பாராட்டுவது. சாப்பிட்டுக் கொண்டே தளை தட்டாமல் வெண்பா சொல்வார். ஈற்றடிகளை மட்டும் அடிக்கடி அவர் சொல்லும் அழகே தனி.

*பாதிக்கா தென்றால் படை*
*இத்தனையோ தோற்றம் இறைக்கு*
*நில்லாது காப்பாயே நீ!*

என்றெல்லாம் கூறுவது நோக்கத்தக்கது. இவற்றை விடவும் சிறப்பு வெண்பாக்களில் எத்தனை எழிற்கலைகளைக் காட்ட முடியுமோ (நடை, அமைப்புமுறை, உருவகங்கள், புதிய உத்திகள்) அத்தனையும் காட்டியுள்ளார். அவரின் இருநூறுக்கும் மேற்பட்ட வெண்பாக்களை எல்லாம் இதயம் பத்திரிகைக்காகப் படி எடுத்துக் கொடுத்து முழுவதையும் ரசித்திருக்கிறேன்.

தமிழில் தலைச்சிறந்த புலவர்களான புலவர் புலமைப்பித்தன், கவிஞர் பொன்னடியான் போன்றவர்கள் இவரின் வெண்பாக்களுக்கு ஒப்பற்ற உரை கூறி எப்போதும் மகிழ்ந்திருப்பர். புலவர் புலமைப்பித்தன் என்னிடம் இப்படிக் கூறினார். "நீதி இலக்கிய வெண்பாக்களின் நெறிமையும், குமரகுருபரின் நுட்பதிட்பமும் தம்பி ராஜாவிடம் ஓங்கி இருக்கிறது. நான் பல இடங்களில் அடடா! என்று வியந்து போனேன்" என்று கூறினார்.

வான்புகழ் வள்ளுவர், மகாகவி பாரதி மீது இசைஞானிக்கு எப்போதும் பெரும் விருப்பம். குறட்பாக்களுக்கு அவர் கூறும் விளக்க உரைகளை அறிஞர் பழ. கருப்பையா போன்றவர்கள் விழிவிரித்து வியப்பார்கள். 'திருக்குறள் மாநாட்டில்' இசைஞானியின் எழுச்சி உரை அமைச்சர்கள் உள்ளிட்ட அவையைக் கலக்கியது என்பதும்

காணத் தக்கது. அவரின் திருக்குறள் உரைவிளக்கம் புத்தகமாக வெளிவரும்போது அவரின் புதிய பார்வைகள் புலப்படும்.

யாப்பின் பயிற்சியும் யாப்பில் தோய்வும் ஆய்வும் எனக்குள் எப்போதும் சுவாசமாக இயல்பாக நடந்தேறும். இந்தப் பயிற்சி வலிமையால் 'தத்தகரத்திற்கு' வெகுவிரைவாகப் பாடல் புனைபவன் நான்தான் என்ற நினைப்பெல்லாம் என்னிடம் இருந்தது.

ஒட்டிப் பிறக்கும் இரட்டைக் குழந்தைகளாய் இசைஞானி மெட்டோடு பாடலையும் எழுதுகிற வேகத்தை பலமுறை நேரில் கண்டு மிரண்டிருக்கிறேன். அன்று முதல் என் பேதமையைக் கண்டு நான் சிரிக்கிறேன். கருவுற்ற அன்னையாய் பிரசவ வேதனையில் கவிஞர்கள் இருக்கும் போது வந்த வேகத்தில் வார்த்தைகளைத் தந்து போகின்ற இசைஞானியின் வசீகரத்தை எப்படிச் சொல்வது?

மேனாட்டு இசைப்பேரறிஞர்கள் எல்லாம் இசைஞானியைப் பார்த்து உரையாட அவ்வப்போது வருவார்கள். அதில் ஒருவர் 'You are my God', 'You are my God' என்று கையை வணங்கி இசைஞானியின் பாதத்தைப் பிடித்துக்கொண்டு இசைப்பதிவு அறையில் வணங்கியபோது கடல்களைத் தாண்டிய இவரின் பெருமையை நினைத்து மகிழ்ந்தேன்.

வேறொருநாள், ஒருவர், 'உங்களின் அதிவேக இசைக் கோர்ப்பு எங்களை எல்லாம் பிரமிக்க வைக்கிறது நீங்கள் உலகின் மிகப்பெரியவர்" என்று மெச்சியதும் என் நினைவில் உண்டு.

சமஸ்கிருதத்தில் இசைஞானி பெரிய கடல் என்று கேள்விப்பட்டதுண்டு. இதனை அவரிடம் கண்டிருக்கிறேன். முக்கியமாக இந்திய மொழிகளிலும் மேனாட்டு மொழிகளிலும் வல்லமை பெற்றவரான இவரின் சரளமான பேச்சு ஆகாய அளவிற்கு இவரை உயர்த்துகிறது என்பேன்.

கன்னடம், தெலுங்கு, மலையாளம் போன்ற படங்களுக்கும் பாடல் எழுத வருகிற கவிஞர்களுக்கு அவர் பாடல் வரிகளைத் தருவதை நான் பலமுறை வியந்து பார்த்திருக்கிறேன்.

மேற்கூறியவை என் கண்கள் தொட்ட இடங்களில் தட்டுப்பட்டவை மட்டுமே. எனக்கு இசையை ரசிக்கத் தெரியுமே தவிர இசைகுறித்து எதுவுமே தெரியாது. சூரிய சந்திர தட்டுகளாக இவரின் இசைத் தட்டுகள் காலம் யாவும் இருக்கும் வீரியம் மிக்கவை என்பது விரிவுலகம் அறிந்ததே.

தமிழுக்கு இதுவரை இல்லாத புதியனவற்றை இவர் படைத்துள்ளார். இசையில் பெரியவர் என்பதால் புதிய யாப்புகளை இவர் படைத்தமை குறிக்கத்தக்கவை. ஆமாம், உருவக, உள்ளடக்க, உத்தி முறைகளில் புத்தம் புதியன பல செய்துள்ளார். இவரின் பரிசோதனை முயற்சிகளை இலக்கிய உலகம் பாராட்டும் என்பது தெளிவு.

தமிழ் மொழிக்கும், தமிழ் இசைக்கும் தொண்டு செய்யும் ஒரு வைரத்தின் பன்முகப் பேராற்றலை அன்றாடம் பார்த்து நான் எழுதும்போது என் பேனா காலில் சலங்கை கட்டி இன்பக் களியாட்டம் போடுகிறது. குறிப்பாக இங்கே அவர் சிறப்புகளை அடியேன் கோடிட்டு மட்டும்தான் காட்டியுள்ளேன். விளக்கமாக எழுதுவது வானத்தை மடிக்கத் துடிப்பதாகும். சங்கப்பாடல் ஒன்று சொல்வது போல் 'விரிப்பின் அகலும் தொகுப்பின் எஞ்சும்' என்பதால் இயலவில்லை. முயலவில்லை!

பல மாதங்களுக்கு முன்பு 'கலைமகள்' இதழ் நடத்திய காப்பியப் போட்டிக்காக நான் படித்த பூமி காரைக்குடி வாழ் கவிஞர்கள் பலர் பாட்டுடைத் தலைவராகப் பலரைத் தேர்வு செய்து எழுதினர். பெரியார், அண்ணா, பாரதியார், பாவேந்தர், கலைஞர், குன்றக்குடி அடிகளார் என அவர்கள் மீது காப்பியம் பாடினர்.

இந்தியாவைத் தாண்டி ஆசியாவிற்கே பெருமை தேடிதந்த பெரியவர் இசைஞானியை எழுத நினைத்தேன். வறிய வீட்டில் பிறந்து பெரிய ஆகாயமாக உயர்ந்த இசைஞானியை உரிய பாடுபொருளாகக் கண்டு அவ்வப்போது கவிதைக் குறிப்பாகச் செய்திகளைச் சேர்த்தேன். இக்காப்பியத்தை ஒரே வாரத்தில் வார்த்தேன். சாகா வரம் பெற்ற இவர் பற்றி மாகாவியம் படைக்க

ஆசைதான். பாட்டுடைத் தலைவனும் விரும்பவில்லை; பாடல் செய்திகளும் கிடைக்கவில்லை. என் ஆசையின் விளைவே இக்குறுங்காவியம். 'கலைமகள்' காப்பியப் போட்டிக்கு அனுப்பாத இக்கவிதைகள் இதோ உங்கள் கைகளில். மண்ணைப் பிடித்து மனிதரைச் செய்தாராம் என்னைப் படைத்த இசைபிதாவுக்கு நன்றி.

எளிய மனிதரின் வலிய பெருமையை வாய்விட்டுப் பாராட்டுங்கள். நம்பிக்கையற்று மெலிந்திருக்கும் ஒட்டுமொத்த மானுடத்திற்கே தெம்பூட்டுங்கள்.

ஓராண்டுக்குப் பிறகு வேலை இன்றி புதுக்கோட்டையில் இருந்தேன். இசைஞானியிடமிருந்து அழைப்பு வந்தது. "அழகி" எனும் படத்திற்கு ஒரு பாடல் எழுதுமாறு பணித்தார். எழுதினேன்.

எனக்கு அர்த்தநாரீஸ்வரராக வாய்த்த என் உயிராய் வெளியே உலவும் உடல் என் அண்ணன் சிங்கப்பூரில் பொறியியல் வல்லுநராகப் பணிபுரியும் திரு.இரா. முருகேசனுக்கும், கழகப்பதிப்பின் மேலாளர் உடன் பிறவாச் சகோதரர் திரு. மு. குமாரசுப்பையாவுக்கும் இந்நூல் உரித்தாகட்டும்!

நன்றி வணக்கம்!

அன்புடன்

(இரா. கருணாநிதி)

# நாக்குள்ள புல்லாங்குழல்

இறை இசை தியாக ராஜரவர் வடிவமோ
இதுராஜ தியாகமோ!
இசைக்கட்டை எல்லாமே பலயுகம் தவம் செய்து
இப்போது உயிர் பெற்றதோ
சுரங்களின் பண்டிகை பெரியோர்க்குத் தாலாட்டு
சொர்க்கத்தின் வயலானதோ
சுதிமீட்டும் வெண்திரை சரஸ்வதி வீணைதான்
சுரம் கூட்டி நடக்கின்றதோ!

இறைவனைப் பாடிடும் இவர் யாரோ? நாக்குடன்
இருக்கும்புல் லாங்குழலோ!
இசைதரும் காற்றுக்கே ஆனந்த விடுதலை
இவராலே உருவானதோ
வரம் ஒன்று இசை என்று தவம் செய்ய வந்ததோ
வாய்மைக்கு சதைபோட்டதோ
வையத்தில் பீத்தோவான் ஹைடினும் மொசாட்டும் ஓர்
வார்ப்பென வே ஆனதோ!

# தேவன் அற்புதமே!

கீத புத்திரனே!  வேத வித்தகமே!
நாத சித்திரமே!  ராஜ நர்த்தனமே!
கான சத்தியமே
ஞான தத்துவமே!

ஓதும் கொற்றவனே!
சோதி பெற்றவனே!
யாவும் கற்றவனே!
பாவம் அற்றவனே!

வாணி தாமரையே!
வேணி பூம்பிறையே!
சோமன் உன் துணையே
நாமக் கீர்த்தனையே!

கேசன் சாலையிலே
ஈசன் ஓவியமே!
ராசன் ஈசனிடம்
நேச காவியமே!

நாவின் நற்பதமே!  தேவன் அற்புதமே!

# நாத ஆகாயம்

பொன்மகனே சின்னத்தாய்
புனிதத்தின் புகழ் வரமே!
உன் இதயத் தாமரையில்
ஓசை வண்டு தேன் சுரக்கும்!
ராசய்யா இசைஉலகில்
பலருக்கும் அரசன் நீ
பேசுநிலா சின்னத்தாய்
பேர்பொருந்த வைத்துள்ளார்!

இறைவனாக உன் இசையை
எலாம் மதிப்பார் ஏனென்றால்
சரஸ்வதியின் வீணையிலே
சப்தத்தை ஆக்குவார்கள்.
சரஸ்வதியை உன் இசையின்
சப்தத்தில் ஆக்குவாய் நீ!
அரும் இசைக்குப் பெருமைதந்த
ஆதாம் நீ பிதாவும் நீ!

‘நீரல்ல இவ்வுலகில்
நிலம்தானே நான்குபங்கு!
நீர்சொன்ன இக்கருத்தும்
எமைநெகிழ வைத்ததய்யா!
உங்களது முத்திரையைக்
குத்தாத உயிர்க் காற்றோ
எங்கெங்கும் செல்லாத
கடிதமாக இருக்கிறது!

பிரவேசம் தவஇசையின்
பிரயோகம்! இசைக்கோர்ப்பா?
பரிசோத னைசெய்யும்
ஞானியா? நீ விஞ்ஞானி.
இசைக்குத்தான் மலர்தருவாய்
இசை அன்பை நீ பெறுவாய்
இசைவிரலில் பொட்டுவைப்பாய்
இசைக்கு அதுவே பதக்கமாகும்!

# இசையின் இசை

உன் இசையின் வானத்தில்
ஓயாது பருவ மழை
என்பதால்தான் எத்தனையோ
உயிரினங்கள் பிழைக்கிறது!
சிலைகளைத்தான் ஒலிப்பதிவு
செய்துவைத்தால் பேச வைப்பாய்
மலர்களல்ல முட்க்ளைத்தான்
மலர்வாசம் வீச வைப்பாய்.

'ஏழுசுரப் படைகளாலே
இங்கிலாந்தை நீ பிடித்தாய்
வாழுகின்றாய் காற்றுசெங்கோல்
கானத்தால் ஆளுகின்றாய்!

தன் முகத்தை இசைபார்க்கும்;
உன்னுடைய சுவாசத்தில்!
அன்னையும் நீ அப்பனும் நீ
அர்த்தநாரீஸ் வரரும் நீ
நெற்றியிலே 'திலகத்தில்
நீநக்கீரன் ஆவாய்!
வெற்றிபெறும் வெள்ளுடையில்
வீணைசரஸ் வதிநீதான்!

கட்டை'களில் இசைசுரத்தில்
உயிர்'களுக்கே உதவியவன்
இரட்டைப்பூக் குழந்தைகளோ
இசை உன்பின் பிறந்ததுவோ?
காற்றேதான் உயிர்என்பார்
கருத்துக்குப் பொருத்தம் நீ?
காற்றேதான் உயிர்என்று
காலமெல்லாம் வாழ்கிறாய் நீ?

தனிபாணி ஆண் உருவில்
தமிழ்வாணி; இசைஞானி
கனியினது மனித உரு
மந்திரக்கா ரனும் நீ தான்
மனிதரினை உன் இசையில்
மவுன 'ஊமை' ஆக்குகிறாய்
பிணிதீர்க்கும் காற்றுகளைப்
'பேசவைத்துப்' பார்க்கிறாயே!

## ஊர் – கேட்காத கவியரங்கம்

கேரள மலையடி வாரத்தில் உள்ள ஊர்
கேட்காத கவியரங்கம்!
கீழ்விழும் வெயிலின்றி வாழ்கிற குயில் எல்லாம்
கிரங்கிடும் இசை அரங்கம்!
வீராந்தோப் பெனும்மேற்கு வெளியினில் தினந்தோறும்
விளையாட்டு முயல் குலுங்கும்
விளையாடும் பிள்ளைகள் விளையாட்டைக் காணவே
வெண்மேகம் கீழ் இறங்கும்!
பேரறி வாளனாம் சீராளன் இசைஞானி
பிறந்த ஊர் பண்ணைப்புரம்!
பெற்ற ஊர் நற்றவம் உற்ற ஊர் அங்குதான்
பிறந்தது சுரத்தின் வரம்!
பாராளும் கலைமகள் பார்வையாய்ப் பிறந்தவன்
பார்க்கின்ற கண்ணின்மணி!
பஞ்சாடை வெண்நெஞ்சன் அஞ்சாத அவன் பலம்
பலநூறு வேள்விமுனி!

# தாய் – சின்னத்தாய் தெய்வக்காற்று

புல்லாங் குழலினைப் போன்றவர் சின்னத்தாய்
வல்லான் இறைவன் வரமாய் சுரமாக
ராசய்யா வந்துதித்தார் ராகதேவி சின்னத்தாய்
பேசிநின்ற தெய்வப் பிறப்பு!

இலையோசை, தேயிலை - ஏலமலை ஓசை
அலையோசை சப்தம் அவர் ஓசை கேட்கும்
வளையோசை வாயோசை வாழ்த்தும்தாய் ஓசை
கலையோசை, தாய்தெய்வக் காற்று!

தரைகீறும் வேர்க்கடலை தானியத்தைத் தந்தாள்
இரைதேடும் குஞ்சுகட் கேற்ற கோழி அத்தாய்
பருந்துவரும் கீறிவரும் பாதுகாக்கக் கண்கள்
திறந்திருந்தே காப்பாள் தினம்!

# கடல் சின்ன (த்) தாய் ஆகும்

சுற்றும் உருண்டை சுழல்பூமி சுற்றியே
பெற்றதோ இவ்வரத்தை! பெண்ணவள் பூமடிதான்
பொன்தூங்கும் தொட்டிலோ! பொங்கும்வங் கக்கடல்தான்
சின்னதாய் முத்தானாள் சேர்ந்து!

இந்தப் புறாக்குஞ்சின் இன்பச் சிறகுகளின்
சந்தமோ ஆனந்த சங்கீதம் உண்டாக்கும்!
வெற்றிலைவாய் வைகறையோ? விட்டுவிட்டுப் போனாளே
கொற்றவனை இங்கே கொடுத்து!

கானமகள் தேன்எச்சில் காற்றாலே சங்கீதம்
ஞானஸ்நா னம்பெற்று ஞாலத்தில் வாழ்கிறதோ!
வான்சிலுவை புள்ளினங்கள் வாழ்த்திசை பாடட்டும்!
தேன் குயிலும் போற்றும் தினம்!

# தந்தை இராமசாமி மறைந்'திருக்கும்' ஆணிவேர்

இறைப்பூதான் பூக்கவே மறைந்துதான் இருக்கிற
எழில் தாங்கும் ஆணிவேர்நீ!
இசைஎனும் மகரந்தம் எங்கிலும் பரவவே
இசை செய்த மாமலர்நீ!
பரிசுத்த ஆவியைப் பாராளும் ராஜனைப்
படைத்த தோர் இசைப்பிதாநீ!
பாருக்கு நிஜமான சொர்க்கத்தைப் படைத்ததோர்
பக்தி மான் எஜமானன்நீ!
பகலெல்லாம் உழைத்தோர்க்குப் பாதுகாப் பைத்தரும்.
பலர் போற்றும் கங்காணிநீ!
பன்னிரு கைகள்போல் பன்னிரு பிள்ளைகள்
படைத்ததோர் முருகனும்நீ!
குகனும்நீ அதிலுமோர் குறிப்புண்டு முப்பெண்டிர்
கொண்ட தோர் கேசனும்நீ!
கோயிலைப் போல்ஒரு குழந்தையைத் தந்தஎம்
கோபுரக் கலச மும்நீ!

# ஞானசம்பந்தர்

இரண்டாறு நாற்பத்தி மூன்றிலே எங்களின்
இசைப்பிதா மகன் தோன்றினான்!
எழில்வாணி தாயுடன் கலைவாணி வீணைபோல்
எப்போதும் உடன் இருந்தான்!
வெருண்டோடும் கன்றுபோல் விளையாடும் ராஜனோ
வீதியில் விளையாடினான்!
வெவ்வேறு விளையாட்டு எப்போதும் இசைப்பாட்டு
வீட்டினில் விளக்காகினான்!
ஒன்பது வயதினில் தந்தையை இழந்தவன்
உயர்வானை இழக்க லானான்!
உலகமே அன்னையாய் உயிர்உடல் அன்னையாய்
உள்ளத்தில் வணங்க லானான்!
எண்பது மேதையர் ஒன்றாகப் பிறந்ததாய்
இறையடி யான் பிறந்தான்!
எப்போதும் அன்னைக்குள் அப்பாவைப் பார்த்தவன்
இசைமடி யில் வளர்ந்தான்.

# சுர ஆலயம்

பாவலர் மூத்தவர் கமலாம்பாள் அடுத்தவர்
பத்மாவதி மூன்றாமவர்!
பாஸ்கரர் பிறந்தபின் ஐந்தாகப் பிறந்தவர்
பலர் போற்ற ஒன்றானவர்!
ஓவியக் கடலினில் ஆறாக அமர் வந்தார்
ஓசையின் கடலாகினர்!
உலகெல்லாம் ஞானியாய் உரைத்திடும் இசைமுகத்
துடன் அவர் வாழலானார்!

# பகலின் விசுவரூபமோ

சுரங்களின் மரம் தந்த சுந்தரப் பழம் ஒன்றில்
சூரிய விதை உள்ளதோ
சொக்கிடும் சங்கீத எழுத்துக்கள் ஒன்றாகி
சுடர்விட்டு நடக்கின்றதோ!
பருக்கையோ ஒன்றுதான் பலரது பசியாற்றும்
படைத்தவன் விசித்திரமோ!
பஞ்சாடை வெள்ளாடை அணிந்தவன் இவனேதான்
பகலின்வி சுவரூபமே.

# வளர்ப்பு
# வேய்ங் குழலைப் பெற்றெடுத்தாள் தலையில் முட்கள்

வேருண்டு காம்புண்டு கிளைகள் உண்டு
வேர்பெற்ற மலருண்டு துன்ப காலம்
நீரில்லை, அடுப்படியில் அகப்பை உண்டு
நெருப்புண்டு பசியோடே ஆளும் உண்டு
சோறில்லை! கோயிலுக்குப் பூசை உண்டு
சூடமுண்டு தீபமுண்டு விழாக்கள் உண்டு
தேரில்லை! அது இருக்கும் இது இருக்கும்
தின்பதற்குத் தினந்தோறும் உணவே இல்லை!

துங்குநிலா அதுகூடத் தூங்கும் தாய்மை
தோளிரண்டும் தூங்காமல் தாங்கும்; கண்கள்
ஏங்கிவரும் விண்மீனின் சோற்றுக் காக
ஏக்கமூச்சை மனம்வாங்கும் குடும்பம் என்ற
பூங்காவில் பூ மழலை சிரிக்கும்; பெற்ற
பூங்கொடியோ பனிநீரை வடிக்கும், ஆமாம்
வேய்ங்குழலைப் பெற்றெடுத்தாள் தலையில் முட்கள்
வேதனையில் ஏசுவைப்போல் வாழ்ந்தாள் அன்னை!

## கண்ணீரால் வளர்ந்து வந்த பயிர்கள் நூறு!

பொன் சுமந்து பெற்றமகள் உலகம் போற்றும்
புகழ்சுமந்து பெற்றமகள் பசிஏக் கத்தால்
மண்சுமந்த வேர்க்கடலை பிடுங்கும் போது
மகன்ராசா பசியாலே தின்றான், நெஞ்சில்
புண்சுமந்த கல்நெஞ்சன் ஒருவன் ஓங்கிப்
போய் அடித்தான் கண்ணீரைத் தாய் வடித்தாள்!
கண்சுமந்த கண்ணீரோ உருளும் ஆறு!
கண்ணீரால் வளர்ந்துவந்த பயிர்கள் நூறு!

கடல் எரித்தே ஆவிபோக்கும் கதிர வன்அக்
கடல்ஆவி போவதுபோல் கதிர்பொ சுக்கும்
உடல் உழைக்கும் தாய்ஆவி போகும், போகும்
உயிர் ஆவி நூறுமுறை போய்த்தி ரும்பும்
மடல்விரித்த மழலையர்கள் அன்னை கையின்
மணிமுகத்தை பார்த்தபடி ஏங்கி நிற்பர்!
தடவிட்டுக் குழந்தைகளை உச்சி மோந்து
தான் பெற்ற தினக்கூலி யால்ம கிழ்வாள்!

# தம்பியர்க்கு சுவாசப்பை
## (பாவலர்)

ஆர்மோன்யப் பெட்டி அதிலுள்ள காற்றலைகள்
யாரின் சுவாசப்பை? எம்பா வலரின்
சுவாசப்பை அப்பை சுழல் கின்ற பூமி
தவப்பை உயிர்மூச்சின் தாய்!

வெளிச்சம் படாதபல் வீடுநாடும் உண்டே
ஒலிச்சிதறல் பாவலரின் ஓசை படா ஊரா?
குழிச்சுரங்கப் பூம்பள்ளக் கும்மாள வண்டாய்
மொழிச் சதங்கை கேட்போர்கள் முன்!

வையம் செழிக்கவைத்து வானாய் வறண்டு நின்றார்
மெய்யில் சிலுவைவைத்து மேனி மெலிந்து நின்றார்
ஐயங்கள் ஏதுமின்றி ஆழ்ந்தஇசை ஞானப்பால்
பையதினம் ஊட்டுமவர் பாட்டு

# உயிரின் உருவம்

அண்ணனே அம்மையப்பன் அண்ணனே பயிலகம்
அண்ணனே புறம் அகம்தான்?
அண்ணனே நூலகம்! அண்ணனே தாய்முகம்
அண்ணனே இசைச் சுகம்தான்!
அண்ணனே அடிவானம்! அ்ண்ணனே சூரியன்
அண்ணனே உயிர் உருதான்!
அண்ணனே சுடர்நாக்கு அண்ணனே உயிர்க்கூடு
அண்ணனும் தாய்ப்பால்தான்!

# விளைந்தபயிர்

பள்ளியின் வாசலில் வெள்ளியின் வெளிச்சங்கள்
பலப்பல உதிப்ப துண்டு!
பள்ளியில் இறைவனைப் பாடிடும் பாடகர்
பாடுவார் இல்லை என்று
கிள்ளையாம் ராஜனைக் கேட்டனர் பாடினான்
கேட்கவே அமுத மென்று
கிட்டாத புகழ்தந்து பட்டாளம் வணங்கின
கீதத்தில் தலைவனென்று!
ஈத்தையென் பார் அது மூங்கிலில் இளையது
இதில்செய்வர் புல்லாங் குழல்!
ஈத்தையை வெட்டியே இருக்கிற இடத்தினில்
ஈத்தையை எடுத்து வருவார்!
கூத்திசை மழலையர் குழல்செய்யத் தெரியாமல்
குழல்செய்து கொண்டு வருவார்!
குழலினை ஊதியே ஓடையின் பக்கத்தில்
கொண்டாடிப் பாடி மகிழ்வார்!

# முதல் – பணம் வாங்கியது

எட்டுத்தான் இவன்கல்வி இதற்குமேல் படிப்பில்லை
எனச்சொன்னான் சோதிடன் தான்!
இப்படிச் சொன்னதைத் தப்பென்று காட்டவே
ஏராள முயற்சி செய்தான்
பட்டினி ஆனாலும் பணம் சேர்த்தான் சேர்த்துத்தான்
படித்திடச் சபத மிட்டான்!
பணத்துக்காய் வைகையின் அணையினில் நீர்விட்டுப்
பாலகன் பாடுபட்டான்
புலரும்முன் வேலைக்குப் போனவன் பாடுவான்
பூங்குயில் அதனைக் கேட்கும்!
புதுப்புது எழுநோட்டு முதல்வாரச் சம்பளம்
பொற்கையில் ஏழு ரூபாய்!
நிலவுக்குப் போனதாய் நெஞ்சுக்குள் மகிழ்ந்தவன்
நிதம் நிதம் உழைத்துவந்தான்!
நிலம்எங்கும் பாவலர் புகழ்கேட்டு மகிழ்ந்தனன்
நெஞ்சத்தை இசையிலிட்டான்!

# படிக்கவில்லை படித்தார்

எட்டைத்தான் முடித்தவன் ஒன்பதை எட்டினான்
இறுதியில் முடிக்க வில்லை!
இவன்கற்க வாய்ப்பில்லை இவரைத்தான் புவனமே
எப்போதும் கற்கின்றதே!
மொட்டெல்லாம் படிக்கையில் மொய்வண்டாய்ப் பறக்கையில்
முகம் ஏங்கிப் பார்த்திடுவான்!
மோனத்தில் அரியவன் ஞானத்தில் பெரியவன்
முத்தமிழ்க் கடலானவன்!
கோம்பையில் ஒன்பது படிக்கவே கூடினான்
கூடினான் கூட வில்லை!
கொட்டிய பணத்துக்கே கொலுவானாள் சரஸ்வதி
குழந்தையைத் தேட வில்லை!
தேம்பிடும் அவன் போல தேசத்தில் பலகோடி
தினம் கற்கத் தெம்பும் இல்லை!
திரிந்தனன் உலகினை அறிந்தனன் இசையெனும்
திசையினில் பறந்து வந்தான்.

# பாதை நடக்கச் சொன்னது

பூவளர் நெஞ்சினன் பொன்னான அவர் அண்ணன்
புகழுக்குப் புகழ் சூடினான்!
பொதுமையின் கட்சியில் புதுமைகள் செய்தவன்
பொதுமக்கள் மனம் தேடினான்!
பாவலர் கச்சேரி பாவலர் அரங்கெனில்
பாற்கடல் பகுதி சேரும்!
பாடினான் ராஜனோ பாட்டிசை நாடினான்
பாவலரை வியந்தான்!

# வாழ்வின் பொருள்

பண்ணைப்பொன் புரத்தினிலே
கிராமோபோன் பாடுகையில்
அண்ணன்கள் பாஸ்கரரும்
அறிவரசர் பாவலரும்
சின்னதாக்கி சத்தத்தைச்
சிறிதாக்கிப் பாட்டிலுள்ள
கண்டசாலா குரலுக்குக்
கச்சிதமாய் குரல்கொடுப்பார்.

அண்ணன்மார் சிவாஜியின்
அன்புமிக்க ரசிகர்கள்
சின்னவிரல் சிவாஜி உடல்
தீண்டிவிடத் துடித்தார்கள்.
பின்நாளில் சிவாஜியுடன்
பேசி ஒன்றாய் மகிழ்ந்தார்கள்.
என்ன இது மானுடமே
இதுதானே வாழ்க்கை வெற்றி.

## முகவரிகள் தந்தவன்

விண்ணெழுதும் பேர்கொண்டான்
 வேதனையால் ஏழ்மையினால்
கண்ணெழுதும் வாழ்க்கையால்
 கல்விகற்க வாய்ப்பில்லை
பண்ணெழுதும் கோவோ
 பலநூறு வீடுகட்டும்
எண்ணெழுதும் வேலைசெய்தார் இங்கு!

## கனி இசை ஞானி

## கை கலைவாணி

முதல்வந்த அண்ணனோ முறையாகப் போதித்தான்
    முழுஞான இசை உணர்ந்தார்
முதுகாக இருக்கின்ற பொதுவான பாமரர்
    மூச்சினை நாடி அறிந்தார்.
சுதைஉயிர் போல்இசை சப்திக்க நினைப்பவர்
    சகோதரர் வரதராசர்!
சகோதரர் வாத்தியக் கருவியைத் தொட்டாலும்
    சத்தமாய்த் திட்டிவிடுவார்!
கதவினை அண்ணன்தான் கைவைத்துத் திறக்கவே
    கலைகற்றார் இளையராசா
கண்கண்ட அண்ணனோ பொன்கொண்ட கையென்று
    காதினிக்க வாழ்த்துரைத்தார்.
நிதம் நிதம் அவனுக்குள் சதிராடி இசை சேர்ந்து
    நெஞ்சுக்குள் நெஞ்சாகினாள்!
நித்திரை மறந்தவன் ஒத்திகை பார்க்கையில்
    நிழல் இசை நிஜமாகினான்

# தாயன்புக்கருணை

தாய்ச்சேலை மாராப்பு போலவே தம்பிகள்
தன்மானம் காத்த அண்ணன்
தங்கத்தின் சிங்கத்தின் வங்கத்தின் உவமைக்குத்
தகுதிகள் கொண்ட மன்னன்!
காய்ச்சலில் வரதரோ கடுமையாய்த் துடிக்கையில்
கண்ணீரைத் தாய் வடித்தாள்!
கச்சேரி மேடைக்கு அச்சேற ராஜரை
கருணைத்தாய் உடன் பணித்தார்!
அண்ணனுடன் செல்ல அரங்கேற்று காதையை
அன்னைதான் தொடங்கிவைத்தாள்!
அன்னைமூ காம்பிகை அருள் அன்புத் தாய் வாக்கால்
அண்டத்தை மகிழவைத்தாள்!
பண்ணவன் சோர்வினில் பாவலன் ஓய்வினில்
பாடுநீ பண்பா டென்றாள்!
பாடினான் மக்கள்முன் பாவலர் வியக்கவே
பயணத்தை என்ன சொல்ல!

# நாதம் கண்டான் மீதம் கண்டான்

சிவன்பாதம் தொட்டவன் இவன்பாதம் பட்டிங்கு
சேராத இடங்கள் இல்லை!
செல்லுவான் நாடகம் மெல்லிசை என்றுதான்
செய்தவை கணக்கில் இல்லை!
எவன்மீதம் செய்யாமல் விட்டானோ எல்லாமே
இவன் நாதன் கண்ட எல்லை!
எத்தனை மக்களைப் படித்தானோ இவன்போல
எவருமே படித்ததில்லை!

# தன் கையால் தாயாகினான்

அண்ணனின் குழுவிலே ஆர்மோன்யம் வாசிப்போர்
அவர்வர முடியவில்லை!
அரைட்ராயர் சிறுவன்தான் ராஜாவை அண்ணனோ
ஆர்மோன்யம் வாசி என்றார்!
மண்ணாளும் ராஜனே! மக்களோ அறியாதார்
மறுக்காமல் வாசி என்றார்
மான்குட்டி வாசிக்க வான்எட்டிப் பார்த்தது
மவுனமாய் அண்ணன் ஆனான்?
பெட்டியைத் தொட்டதால் திட்டியே அடித்தவன்
பிள்ளையில் வாணி என்றான்!
தட்டுவோர் கைதட்டத் தப்பாத இசைமீட்டும்
தைரிய ராஜனானான்!
தன் கையைத் தொடுகையில் கங்கையைக் காட்டினான்
தன்கையால் தாயாகினான்!

# நாதக் கதிர் வீச்சு

அண்ணனின் பாடலை அரங்கினில் பாடினால்
அரங்கமே ஆர்ப்பரிக்கும்!
ஆயிரம் கருத்துடன் பாய்கிற அம்பினை
அண்ணனின் வாய்செலுத்தும்!
எண்ணத்தைத் திரை இசை மெட்டிலே கட்டியே
இசைத்திடத் தேன் இனிக்கும்!
ஏராள நெஞ்சங்கள் பாராளும் பாவலர்
இதழ்களின் மேல் பறக்கும்!
பிறைமுதல் கடல்ஆழத் தரைவரை திரைப்பாடல்
பெரும்தாக்கத் தைநிகழ்த்தும்!
பிறர் போட்ட திரைப்பாட்டு பிறருக்கே பெருமையாம்
பிறர்புகழ் நமக்கெதற்கு
நிறைவான பாடலை நிகழ்த்துவோம் நாம் என்று
நெஞ்சுக்குள் தீர்மானித்தார்!
நினைத்தவர் உழைத்தவர் ஒரேஒரு சூரிய
நெருப்பென வே நிலைத்தார்!

# கால் வைத்தார் செங்கோல் வைத்தார்

அறுபத்தி எட்டிலோ அண்ணனின் கைப்பற்றி
அடைந்தனன் சென்னை பூமி
அன்றாடம் பிரச்சினை ஆகாரம் முதற்கொண்டு
அடுக்கடுக் காய் வறுமை!
இருபத்தி எட்டுப்போல் இன்னமும் இசைத் தொண்டு
எப்போது மே இளமை!
இருப்பிடம் கோயிலாய் இருப்பதால் தான் அவன்
என்றென்று மே வளமை!
முழுநாளும் பட்டினி மூன்று நாள் பட்டினி
முடக்கிட வரும் ஏழ்மை!
மூச்சினை உணவாக்கி முப்போதும் வாழ்ந்தவன்
முழுவாழ்க்கையும் பெருமை!
அழுதாலும் இசைமாதா அன்றாடம் சிரிக்கவே
அயராது இசை முழக்கம்!
அடுத்ததோர் வேளைக்கு அது இல்லை என்றாலும்
அன்னைக்குக் கை படைக்கும்!

# நடந்ததும் கடந்ததும்

மண்டபங்க ளெங்குமே மாபெரும் நாடக
மயமாக நிறைந்திருக்கும்!
மணிசேக ரர்போல மற்றவர் நடத்துவர்
மக்களோ வர மறுக்கும்!
வண்டியில் வாத்தியக் கருவியை ஏற்றவும்
வகையின்றி தினம் நடக்கும்!
வரும் பணம் குறைவினால் தரும்பணம் நிறைவினால்
வாதைதான் உயிர் உலுக்கும்!
நான்குநாள் ஐந்துநாள் நடக்கின்ற கச்சேரி
நம்பிக்கைக் கண் திறக்கும்!
நடந்ததும் பணம் வந்து கடந்ததும் பசிவந்து
நச்சரிப் பைவளர்க்கும்!
காண்கிற திசைஎங்கும் வறுமையின் காற்றுத்தான்
கால்களை யா தடுக்கும்?
காலைநிலா வானத்தை மேகங்கள் சூழ்ந்தாலும்
கண்ணீரைத் தான் வடிக்கும்!

# கல்வி

தரமணியாய் ராசய்யா தான் பயின்ற
தன் அணியில் தனியாகப் போற்றப்பட்டார்!
கருகனியாய் இருக்கையிலே சின்னத் தாயின்
கானத்தைத் தொப்பூழ்க் காம் பிலேயே பெற்றார்
பரமனெனத் தம்பியர்க்கு வரதராசர்
பள்ளியிலே பக்தியுடன் மூழ்கிக் கற்றார்
டிரி டினியில் இந்நுட்பச் செறிவைக் காட்டி
தெய்வஇசை யால் தங்கப் பதக்கம் பெற்றார்!

பூக்களுக்கே உயிரணுக்கள் பூக்கும்; ராகப்
பொன் புல்லாங்குழல் எடுத்து வாசிக் கும்நல்
ஜீ.கே.வெங் கடேசிடத்தில் கற்றார்! ஞானச்
சிகரத்தைப் பலவித்தை படிக்க வைத்தார்!
ஈக்களைப் போல் வாசிக்கும் கலைஞர் கூட்டம்
இவர் இசையில் மயக்கமுற்றுத் தினம்கி டக்கும்
காக்கைகளைக் குயிலாக்கும் கீர்த்தி பெற்றே
கைநேர்த்தி கற்றுநிதம் அவர் போ தித்தார்.

# தன்ராஜ் வியந்த
# 'வெண்தாஜ்' மஹால்

மேற்கத்ய நுட்பங்கள் மேலான கீதஞானம்
சேர்க்குமிசைச் சங்கீதம் செய்நேர்த்திக் கையழகு
வெண் தாஜ் மஹால்கட்டும்; வெள்ளைமலர் வாணிக்கே,
தன்ராஜ் வியந்த அவர் தாய்

# நதிச்சுவடு உன்பாதம்

பட ஊரில் இராமனாய் பலருக்கும் உதவினார்
பலர் நெஞ்சின் கேள்வி ஆனார்!
பஞ்சரு ணாசல பாமுனி அழைத்ததால்
பலநூறு வேள்வி செய்தார்!

அடாவடி மோசடி அரக்கர்கள் அஞ்சினர்
அகலிகைக்கு உதவி செய்தார்!
அருள்கீத இசை நாதம் அதன்பாத நதியாகி
ஆங்காங்கே செழிக்க வைத்தார்.

# கடல் கற்றது கையில்

கோபால கிருஷ்ணனாம் மிருதங்கக் குருவிடம்
குயிலென இசைபயின்றான்
குவிகின்ற பணம்பெற்றும் குறுகிய சிலரிடம்
குறைவாக வேவாங்கினான்
கோபங்கள் வரும் அதன் காரணம் இவர் போட்ட
கோட்டினைச் சிலர் மீறுவார்!
கொடுஅதை விடுஇதை என்கிற ஒருசிலர்
குறைகளால் மனம் மாறுவார்!

# பெரிதுவக்கும் அமுத 'சுர'பிகள்

வையத்தில் நாதத்தின் விலாசமாம் இசைஞானி
வசந்தமே அன்னை ஜீவா!
வற்றாத சுரபியாம் இசைக்கடல் ராஜரை
வணங்குவார் எழில் பூவாய்!
வெய்யோனின் வெண்ணிலா பவதார ணியோ நல்
வெற்றிகள் பெற்ற வாணி!
வீணையாய்ப் பிறந்தனள் ஏனையோர் வியந்திடும்
வேறோரு பெண்சிம்பொனி!

ஐயிரு வயதிலே கார்த்திக்தான் அவர்தந்தை
அசந்திட இசையமைத்தான்
அவன் போட்ட இசையினைத் தவம் கேட்டுப் பெற்றதாய்
அன்னவர் முக மகிழ்ந்தார்!
பையனின் பாலகப் பருவத்து மெட்டினைப்
படத்திலும் சேர்த்து வைத்தார்!
பால்மன யுவன்பாட்டு பலருக்கும் அதிர்வேட்டு
பலர்கேட்டு வேர்த்து வந்தார்!

# ராகராஜநடை

சின்னத்தாய் ஸ்ரீரமணர் சீரடி சாயிபாபா
மென்பூ பரமஹம்சர் மேதையர் மாயி அம்மா
கோடிசாமி போன்றோரைக் கும்பிடும் தன்குருவாய்
நாடியது ராஜ நடை

# இதழ் காற்றே பாலானது

அனாதையாய் வரும்காற்றுக் கடைக்கலம் நீதந்தால்
ஆயிரம் நாடாளுமே!
அலைகின்ற காற்றுன்றன் அதரத்தில் படுமென்றால்
அதுதெய்வத் தேவாரமே!
தினந்தோறும் இசைக்கோயில் திருவிழா நடத்துமுன்
தேகமோ நாதசுரமே!
தென்பாண்டி மண்டலத்தெய்வமே நீ எங்கள்
தித்திக்கும் எட்டாம் சுரமே!
பொன்புல்லாங் குழலில்நீ பூஇதழ் வைப்பது
புதுமார்பு போலானது!
புவிஇசைச் சுரங்களாம் பிள்ளையர்க்கு உன் இதழ்
பூங்காற்றே பாலானது!
உன்விரல் யாவுமே உன்சுரக் கட்டையை
ஒவ்வென்றாய்த் தழுவிடுதே!
உலகினில் உயிர்களின் உள்ளங்கள் தன்னக
உடல்விட்டு நழுவிடுதே!

# வெண்டாமரை தலைமுடிகள் வீணைமகள் அறிகுறிகள்

திறக்கின்ற எழுதுகோலைத் திறக்கும் போதே
    தெம்பூட்டும் தெய்வீகப் பால்சு ரக்கும்
குருக்களுக்கும் முனிவருக்கும் வியப்பைக் காட்டும்
    கோடிபொருள் மெய்ப்பொருளால் தமிழ் இனிக்கும்
விருந்தே! வெண் டாமரைப்பூ நரைகள்: அந்த
    வீணைமகள் இருக்கும்அறி குறிகள் தானே!
அருந்தவம்நீ கலைத்தவம் நீ வான்சு ரம்நீ
    ஆகாயப் பின்புறம் நீ சிவ புரம்நீ!

# புவியீர்ப்பு இசை

அம்மையின் தழும்பாகும் அவன் செய்த இசைக்கோர்வை
அத்தடம் மறைவதில்லை!
அத்தழும் பின்றியே எதிர்ப்பாற்றல் அது இல்லை
ஆயுளும் நிலைப்பதில்லை!
நம்பிக்கை எழுத்தினை நடைபோடும் கால்காட்டும்
நடைச்சுவடு அழிவதில்லை
நானிலம் விழிக்கவே நாடிடும் சூரியன்
நலிவுற்று மெலிவ தில்லை!
விரல் இசை மந்திரத்தால் விண்வெளி ஏற்றினான்
விசித்திரம் அவன் காட்டினான்!
விசைகளில் இசைவிசை வீணல்ல புவியீர்ப்பு
விசை என்று நிலை நாட்டினான்!
இராப்பகல் இசை இமை இறங்காமல் உறங்காமல்
எப்போதும் விழித்திருப்பான்!
எழுத்தினில் இசைகாட்டி கழுத்தினில் புகழ் ஈட்டி
எல்லார்க்கும் ஜொலித்திருப்பான்!

## படம்ஓட பழுது பார்த்தார்

அழும்குழந்தை எதைத்தான்கேட் டழுமென் றிங்கே
அறிந்த அன்னை அவள்போலத் திரைப்படத்தின்
முழுமைக்கும் எது வேண்டும் என்ற றறிந்து
மொத்தமாக வெற்றி பெறச் செய்தார்! பாடல்
எழுதுவதில் இயக்குவதில் நடிப்பில்; சொல்ல
இயலாத உணர்வுகளை இசையில் சொன்னார்!
'பழுதுபார்த்தார்' இவர்இசைதான் இல்லை என்றால்
பலபடங்கள் 'ஓடாமல்' போயிருக்கும்!

(வேறு)

படம் ஓடும் போதிலே பின்னணி இசைபோடும்
பாங்கினை யார் உரைப்பார்!
பார்க்கிற வேலையைப் பக்தியில் செய்பவன்
பலத்தினை யார் ஜெயிப்பார்!
உடனுடன் செய்பவர்க் கோய்வுண்டா இசைத்தொண்டே
ஒய்வுதான் என்றுரைப்பார்
ஓசையே இல்லாத அமைதியை விரும்புவார்
ஓசைக்கே பிரம்மனானார்!

# விண்ணப்பம்

இசைக்கு நீ முகவரி தான்
இசைக்குப் பாதுகாவலன் நீ
இசைத்தட்டின் கோடுகள் உன்
இதழ்மொட்டின் கோடுகளோ?
உன் வயது அவதாரம்
உன் வயதை யார் சொல்வார்?
உன் உயரம் உன் எடையோ
உலவுமிசைக் காற்றாகும்.

உன் கல்வித் தகுதி என்ன?
உனை ஆய்ந்தால் பலர் முனைவர்,
எண்ணில்லாத் தகுதியுண்டு
எழுத்தாளர், படம் பிடிப்போர்
பிற தகுதி அளந்துசொன்னால்
பெரும் நீளப் பட்டியல்தான்
சுர தகுதி சொல்லிடவே
சொற்களாலே முடியவில்லை!

அசைத்திடவே முடியாத
ஆழ்ந்த ஞான முனிவரேநீ
இசை என்னும் கையெழுத்தாய்
இந்நாட்டில் வாழ்கின்றாய்
பண்ணைப் பொன் புரத்தமிழே!
பாவலரின் தம்பியே நீ
பண்காந்தம்; நீ பிடித்த
பண்ணையடி மைகளா நாம்!

# ஞானவான்

ஒப்பாக யாரைச் சொல்ல
    உதயத்துக் கதிரே! ராகம்
ஒப்பிலாக் கடலாம்; வாங்கி
    உயிர்காக்கும் இசையைப் பெய்து
முப்போதும் காக்கும் வானே
    முழுப்பூமி பிழைக்க வானே
கற்பார்கள் இசையைக் கற்கக்
    கடலினும் பெரியவானே!

# நாதபோதிமரம்

கொடிகொடுத்த மலர்த்தேனை வாங்கும் தாவிக்
குரல் கொடுத்த குயில்குரலை வாங்கும்; கீத
முடிகொடுத்த அரசவைகள் ஏங்கும்; ராக
முகம்கொடுத்த இசைபெற்று நீங்கும்; பாட்டு
இடிகொடுத்த பலர்மனதோ ஒடுங்கும்; ஜீவ
இசைகொடுத்த பலர்மனதோ துலங்கும்; பாட்டைப்
படிஎடுத்து பலநாடு படிக்கும்; ராஜ
பார்வைபட உலகமெங்கும் துடிக்கும் அன்றோ!

## வெண்பாவின் நண்பா

இசைபாடும் கருங்குயிலைக் கையில் வைத்தான்
இசைவாணி தெய்வத்தை மெய்யில் வைத்தான்
அசைந்தாடும் விரல் அசைவில் உலகை வைத்தான்
அதரத்தில் இசைத்தாய்க்குக் கோயில் வைத்தான்
பசிதீர்க்கும் மெட்டுகளில் உணவை வைத்தான்
பலதேசம் ஆள்வதற்குப்படைத்து வைத்தான்
திசை ஆளும் அரசாங்கம் இசையில் வைத்தான்
தேன்தமிழின் வெண்பாவில் அன்பை வைத்தான்.

# வேலில் சிவம்

ஞாலத்தில் அதிசயம்நீ; ஆழ்ந்த முக்தி
ஞானத்தின் தரிசனம் நீ; பக்தி பொங்கும்
கோலத்தில் சித்தர்நீ; சிவனைப் போற்றும்
குரவர்கள் நால்வரிலே ஐந்தாம் ஆள்நீ!
காலத்தில் இசைத்தட்டு செய்த கர்த்தா
கதிர்த்தட்டாய் நிலைத்திருக்கச் செய்ததும்நீ!
வேலொத்த தேகத்தில் சிவனை வைத்த
வெள்ளைப்பூ உள்ளம் நீ புகழ் இல்லம் நீ!

நெக்குருகும் உன்பாவில் சிக்க வைத்தாய்
நேர்நிரையின் வெண்பாவில் தக்க வைத்தாய்!
அக்கினியின் சுடர் எழுத்தில் இருள்கி ழித்த
ஆதவனை இன்பத்தில் சொக்க வைத்தாய்!
எக்கணமும் ஞானத்தின் நுரைத தும்பும்
இன்னமுதை மண்ணுலகில் சுவைக்க வைத்தாய்!
மக்களெல்லாம் தவம் செய்ய! தவச்சித் தர்கள்
மனம்மகிழ மதிக்கடலாய் நீ பிறந்தாய்!

# தேசிய விருதுகள் பெற்ற ஆசிய ஜோதி

பட்டங்கள் ஒன்றிரண்டா? விரித்து ரைத்துப்
பட்டியலும் போட்டிடவா? ஈர்ப்பு மிக்க
மெட்டமைத்துத் தேசியத்தின் விருது மூன்று
மேதையவர் கீதத்தால் வாங்கி னாரே!
கட்டைவிரல் சுட்டுவிரல் அழகிற் குத்தான்
கலைமாம ணிவிருதினைத் தாங்கி னாரே
வட்டபூமி பாராட்டும் அரிசோ னாதான்
வழங்கியடாக் டர் பட்டம் அவர்பெற்றாரே!

தீந்தமிழர் பாராட்டும் பரிசும் நூறு
திசைஎங்கும் தந்தவைகள் அவைகள் வேறு!
ஆந்திராவின் மாநிலமோ மகிழ்ந்து தந்த
அதிசயிக்கும் விருதுகளோ பெருமை கூறும்
பூந்தமிழின் பூம்புகாரின் தலைவன் அன்று
புகழ்சூடி ஞானி என்று பட்டம் தந்தார்
சேர்ந்தபட்டம் குவிந்திருக்க; கேரளத்தார்
சின்னத்தாய் மகனுக்குப் பட்டம் தந்தார்!

# ஆசியாவை மீட்ட அதிசயப் பாண்டியன்

நான்காயி ரத்துக்கும் மேலிருக்கும்
நாதமவன் இசை அமைத்த இனிய பாடல்!
பாண்டியர்கள் பூமியிலே பிறந்த ராசன்
பாரதத்தின், ஆசியாவின் வெற்றி வேந்தன்!
சான்றோர்கள் பல்கலையின் கழகத் தாலே
சான்றளித்து டாக்டராகச் சிறந்த ஞானி!
எண்ணூறு படங்களுக்கே இசை அமைத்து
இன்றுவரை புதுமைபல நிகழ்த்தும் மேதை!

# நூல் மெலிந்த திரிதேகம் தீபங்கள் ஏற்றும்

தாள்பணிந்து வணங்கவைக்கும் புனிதத் தோற்றம்
தமிழ்கனிந்து சுவைகாட்டும் எழுத்தில் ஏற்றம்
ஆள்மெலிந்து முகம் மெழுகின் தீபம் காட்டும்
அகம் குளிர்ந்து உதவுகையில் தாய்மை ஊட்டம்
நூல்மெலிந்த திரியாகத் தேகம்; நாட்டில்
நூறுகோடி விளக்கெரிய வெளிச்சம் நீட்டும்!
வாள் அணிந்த வெற்றிகளைத் தோள ணிந்த
வரலாற்றைப் படைத்தவரே இளைய ராசா!

# வை'கையால்' வளம் தந்தவர்

உருண்டோடும் காலத்தில் இளைய ராஜா
உடன்பிறந்தோர் உடன்செய்த இசைநி கழ்ச்சி
இரண்டாயிர ரத்துக்கும் மேலிருக்கும்
ஏராள இதயத்தின் நாடி பார்த்து
திரண்டுவந்த மக்களுக்கு சுவை கொடுத்த
தேவராக அனுபவங்கள் கோடி கோடி
வறண்டிருந்த உலகத்தில் அண்ணன் தம்பி
வைகைஎன வளம்கொடுத்தார் மகிழ்வாய் ஓடி!

(வேறு)

ஒப்பில்லா இசைக்கோர்வை இசைஞானி ஒலிநாடா
உலகெங்கும் புகழ் வாய்ந்ததே!
ஒன்றுமில்லை காற்றின்றி என்றபேர் ஒலிநாடா
உயரத்தில் உயரமானதே!
எப்படிப் பேர் சொல்ல எனும் ஒரு இசைநாடா
இசை உலகில் சிகரமானதே!
எத்தனைத் துறையுண்டு அத்தனைத் துறையிலும்
இவரிடம் அகரமானதே!

# காற்றாயுள்

அண்டத்துக் காற்றாக ஆயுளினைப் பெற்ற மேதை
கண்டத்தான் ஆண்டவனைக் கண்ணுக்குள் வைத்த ஞானி
பிண்டத்தை ஆரூரார் பேர்சொல்லத் தந்த நெஞ்சம்
கண்டேத்தும் கொண்டேத்தும் கண்!

# காயம் – வெற்றி தாயம்

ஓயாத நாதமழை ஊர்க்கெல்லாம் தான்பெய்து
வாயாரப் பண் இசைத்து வையத்தை வாழவைத்து
தாயான ஆண்டவனைத் தாவும் குழந்தை அன்னை
காயத்தைக் கொண்டதனைக் காண்!

## ஞாயிறு தினகரனில் கோடி ஞாயிறு

சன்னியாசி ஆனவர்கள் வீட்டை மட்டும்
சதாநினைத்து வாழ்வதுதான் துறவா என்பீர்!
உன்னோடு இடைவிடாது வருவதென்ன
உன்மனமே என்று கூறி தூய்மை செய்வீர்!
என்னென்ன கருத்துக்களைத் தினகரன்தான்
ஏராளச் சூரியனைப் பிரசவிக்கும்!
தன்னைத்தான் இறைவனென்று கூறுகின்ற
தகுதியார்க்கு? எனவினவி இருள் எரிப்பீர்!

# இவரது ஆசை எல்லை

மேற்கத்ய குறியீட்டை வைத்திசை கோர்க்கின்ற
மேதமை மேஸ்ட்ரோ இவர்!
மேனகை இசைசெய்து கானகத் தவசியாய்
மிகமௌன மானாரிவர்!
நாற்காலி போடாமல் உட்கார்ந்தே - இருக்கின்றார்
நாற்காலி போலி என்றா?
நடைவண்டி போல் வந்த வழித்துணை மரப்பெட்டி
நாதமாய் உருவானதா?

சப்தத்தில் சொர்க்கத்தைப் படைத்தவன் நிசப்தத்தில்
சந்தோசம் கொள்வதென்ன
சங்கீத நெஞ்சுக்குள் எங்கெங்கும் தவயோக
சக்திகள் இருப்பதாலா?
ஒப்பிலா இந்திய மேற்கத்ய சங்கீத
ஒலிகளில் புதுமை செய்தான்
உலகத்தில் இந்திய மண்ணிலே வாழ்வதே
ஒருபெரும் பெருமை என்பான்!

கூடிடும் கூட்டங்கள் அவரது ஆன்மீகக்
குணத்துக்குப் பிடிக்கவில்லை!
குழுக்களின் மனங்களின் அழுக்கினைக் காண்பதால்
கொஞ்சமும் விருப்பம் இல்லை!
ஏடுகள் பல பார்க்க, தொலைக்காட்சி காணவும்
இவர் மனம் நினைப்பதில்லை!
இறையடி விழுவதும் பிறைமுடி தொழுவதும்
இவரது ஆசை எல்லை!



கவிஞர் இரா. கருணாநிதி,
எம்.ஏ.,எம்ஃபில்.,பிஎச்.டி., படித்துள்ளார்.
நல்ல நுட்பமான மரபுக் கவிஞர்.
புதிய சிந்தனைகள் இவர் கவிதைகளில்
மணி மகுடமாக இருப்பதைக் காணலாம்.

இவரின் பரிசுகளின் பட்டியலைப் பார்க்கும் போது
எதிர்காலத்தில் கின்னஸ் புத்தகத்தில்
இவர் நிச்சயம் இடம் பெறுவார் என்று
நான் உறுதியாகக் கூறுகிறேன்.

படைப்பு ஆக்கமும் ஆய்வு நோக்கமும்
இவரை இலக்கிய மலையின் உச்சிக்கே
கொண்டு செல்லும்.

நல்ல பண்புகளைக் கொண்ட தம்பி
உயர்ந்த நிலையை அடைய வாழ்த்துகிறேன்.

அன்புடன்

சரதா



பொன்புல்லாங் குழலில்நீ பூஇதழ் வைப்பது
புதுமார்பு போலானது!
புவிஇசைச் சுரங்களாம் பிள்ளையர்க்கு உன் இதழ்
பூங்காற்றே பாலானது!

வடிவம் - [illegible]